# தமிழ் நாடக வரலாறு



கவிஞர். கு.சா. கிருஷ்ணமூர்த்தி

ாதி பதிப்பகம்

# அன்புப் படையல்



நாடகத்தாய் மடிதவழ்ந்து வளர்ந்துயர்ந்து
நவரசநற் கலைபயின்று திரைய ரங்கில்
ஈடிணையே சொலற்கரிய நடிகனாகி
இந்நாட்டின் முதலமைச்சர் பொறுப்பையேற்றுப்
பீடுபெற்றுப் பெரும்புரட்சித் தலைவ ரென்னும்
பெருமைபெற்று விளங்கும் எம்.ஜி.ஆர். தனக்கென்
நாடகத்தின் வரலாற்று நூலை அன்பின்
நற்படைய லிட்டுவந்தேன்! நாளும் வாழ்க!

அன்பன்,

**கு. சா. கிருஷ்ணமூர்த்தி**

ம. பொ. சிவஞானம்,
தலைவர்,
தமிழ்நாடு சட்டமன்ற மேலவை.
புனித ஜார்ஜ் கோட்டை,
சென்னை-9.

25—6—1979,

# முன்னுரை

கவிஞர் கு. சா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் கலையுலகத்திற்கு நன்கு அறிமுகமானவர்; என்னுடைய நெடுநாளைய நண்பர். எனது தலைமையில் இயங்கி வரும் தமிழரசுக் கழகத்தின் முன்னணித் தலைவர்களுள் ஒருவராக விளங்குபவர். புதிய தமிழகம் படைக்க நான் எடுத்துக்கொண்ட முயற்சிகளில் எல்லாம் என்னுடன் தோளோடு தோள் சேர்த்துத் தொண்டாற்றியவர்.

இளமையில் நாடகத் துறையில் சேர்ந்து நடிப்புக் கலையில் பயிற்சியும் அனுபவமும் பெற்ற இவர். நாடக நூலாசிரியருங் கூட! நாடகத் தமிழின் ஒரு கூறாக உள்ள இசைத் தமிழிலும் பயிற்சி பெற்றவர். பாடல்கள் புனையவும், அதற்கு இசையமைக்கவும் வல்லவர்.

முத்தமிழ்த் துறையிலே தமக்குள்ள அறிவையும், அனுபவத்தையும் கொண்டு, ''நாடகத் தமிழ்'' என்னும் பொருள் பற்றி. இந்தியப் பல்கலைக் கழகங்களிலே தலைசிறந்ததான சென்னைப் பல்கலைக் கழகத்தில் தாம் நிகழ்த்திய ஆராய்ச்சியுரையை இந்த நூல் வடிவில் தந்துள்ளார்.

நம் தாய் மொழியை ''முத்தமிழ்'' என்கிறோம். அது, ஏன்?—என்பதை இந்நூலில் ஆசிரியர் விளக்குகிறார். இசைத் தமிழுக்கும் நாடகத் தமிழுக்கும் உள்ள தொடர்பை ஆராய்ச்சி ரீதியில் விமர்சித்து, அந்த இரண்டுக்குமுள்ள இடைவெளியையும் அளந்து காட்டுகிறார்.

தமிழ் மொழியிலே, நாடக இலக்கிய—இலக்கண நூல்கள் முன்னொரு காலத்தில் இருந்தன என்பதனைச் சான்றுகளுடன் விவரித்து, பிற்காலத்தில் அவை அழிந்

தொழிந்ததைச் சுட்டிக்காட்டி, ஆயாசப்படுகிறுர், தமிழிடத்துக் கரைகாணுத பற்றுடைய ஆசிரியர்.

இந்நூலின் முற்பகுதியானது ஆசிரியரின் ஆராய்ச்சி அறிவைப் புலப்படுத்துகின்றது. பிற்பகுதி முழுவதும் நாடகத் துறையில் அவருக்குள்ள அனுபவத்தைப் புலப்படுத்துகின்றது. நாடகக் கலேவளர்ச்சிக்குத் தொண்டாற்றிய பழைய நாடகாசிரியர்களேயும், நடிக-நடிகையரையும், நாடகக் கம்பெனிகளேயும் பட்டியல் தொகுத்துக் காட்டியுள்ளார். யாரையும், எதையும் விட்டுவிடவில்லே. தக்கார் சிலர் பற்றிச் சற்று விரிவாகவே கூறியுள்ளார்.

கடந்தகால நாடகங்கள் சிலவற்றைப்பற்றி சமுதாயத்தில் முரண்பாடுடைய இருவேறு கருத்து நிலவிவருகின்றதல்லவா! அதை ஆசிரியர் புறக்கணிக்கவில்லே. அதுபற்றித் தம்முடைய ஆராய்ச்சி ரீதியான முடிவுகளேயும் இந்நூலில் தந்துள்ளார். குறிப்பாக, தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள் எழுதிய "கோவலன்" நாடகம் பற்றித் தமிழ்ப் புலவருலகில் கூறப்படும் குறைகளுக்கு கு.சா.கி. சமாதானம் சொல்ல முயன்றிருக்கிறுர்.

சிலப்பதிகாரப் பாத்திரங்களின் சிறப்பைக் குறைத்திடும் வகையில் தவத்திரு சுவாமிகள் கோவலன் நாடகத்தை அமைத்ததாகச் சொல்லப்படுவதைச் சிறிது சினத்தோடு மறுத்துரைக்கிறுர். இளங்கோவடிகளேயும் விஞ்சும் வகையில் சிலப்பதிகாரப் பாத்திரங்களின் தரத்தைத் தவத்திரு சுவாமிகள் உயர்த்தியிருப்பதாகவும் அழுத்திக் கூறுகிறுர். ஆனுல், சுவாமிகள் எழுதிய நாடகத்தை நடித்த நடிகர்கள் சிலப்பதிகாரப் பாத்திரங்களே இளங்கோ படைத்த தரத்திலிருந்து சிறிது தாழ்த்திவிட்டனர் என்ற உண்மையையும் இந்நூலாசிரியர் ஒப்புக் கொள்கிறுர். கவிஞர் கு.சா.கி. சமாதானம் கூறிய பின்னரும் "கோவலன்" நாடகம் பற்றி எழுந்துள்ள கருத்து வேற்றுமை நீடிக்கத்தான் செய்யும். அது எப்படியிருப்பினும், "கோவலன்" நாடகம் பற்றி இந்

நூலாசிரியர் தெரிவித்துள்ள கருத்துக்களையும் புலவருலகம் படித்தறிய வேண்டும்.

தேச விடுதலைப்போராட்ட காலத்தில் தேசபக்தியை வளர்த்த நாடகங்கள் பற்றியும், நடிகர்கள் பற்றியும் இந் நூலில் தகவல்கள் தரப்பட்டுள்ளன. நானறிந்த வரை வேறு நூல்களில் கிடைக்காத செய்திகளை இந்நூலில் பெற முடிகிறது. நாடக மேடைக்கென்றே புனையப்பட்டு மக்களிடம் செல்வாக்குப் பெற்று விளங்கிய தேசீயப் பாடல்கள் சில வற்றை முழுசாகவும், இன்னும் சிலவற்றின் சுவைமிக்க பகுதிகளையும் ஆசிரியர் கு.சா.கி. இந்நூலில் கொடுத்துள்ளார். எனது நெஞ்சில் நீக்கமற நிறைந்திருக்கும் நாடகக் கலைஞரான 'முத்தமிழ்க் கலாவித்துவரத்தின' ஔவை தி. க. சண்முகம் உள்ளிட்ட டி.கே.எஸ். சகோதரர்களையும், அவர்களால் நாடக உலகில் ஏற்பட்ட முற்போக்கான மாறுதல்களையும் ஆசிரியர் கு.சா.கி. விரிவாகக் கூறியுள்ளார். மிகுந்த முயற்சியெடுத்து ஆராய்ந்து இந்த நூலை எழுதியுள்ளார்.

தமிழ் மொழியின் வளர்ச்சிக்குப் பயன்படத்தக்க இந்த அரிய தகவல் நூலை வழங்கிய நாடகாசிரியர் கவிஞர் கு. சா. கிருஷ்ணமூர்த்தி அவர்களை மனமுவந்து பாராட்டுகிறேன். இதனையடுத்துத் தமிழ் இசையைப் பற்றியும் ஆசிரியர் கு.சா.கி. நூல் எழுதி வெளியிட வேண்டும் என்பது என் விருப்பம்.

தமிழ் வாழ்க!

நாடகக் கலை வளர்க!

ம. பொ. சிவஞானம்

**M. K. RADHA**

Phone : 76749

4, Brindavan St.
Madras - 600 004

31—8—77

எனது அன்பிற்குரிய சகோதரன் திரு. கு. சா. கிருஷ்ண மூர்த்திக்கு அநேக ஆசீர்வாதம்.

சென்னைப் பல்கலைக் கழகம் ஆண்டுதோறும் நடத்தி வரும் பம்மல் சம்பந்த முதலியார் அறக்கட்டளைச் சொற் பொழிவுக்கு இந்த ஆண்டு உன்னைத் தேர்ந்தெடுத்திருப்பது அறிந்து மட்டற்ற மகிழ்ச்சியடைந்தேன்.

அந்த அழைப்பிதழைப் படித்ததும் எனக்கு நமது இளமைப் பருவ நிகழ்ச்சிகளெல்லாம் நினைவில் வந்து நிழலாடியது.

அன்று, அப்பாவின் ஆணைப்படி—நாடகப் பாடங்களைச் சொல்லிக் கொடுக்கும்போதும் ஒத்திகை பார்க்கும்போதும் எத்தனையோ முறை உன்னைக் கண்டித்தும் தண்டித்தும் ஏன் அடித்தும்கூட இருக்கிறேன். ஆனால், இன்று உன்னைக் கவிஞனாக—நாடகாசிரியனாக—பல்கலைக் கழகப் பேச்சாளனாகக் காணும்போது என் உள்ளம் பெருமிதமடைகிறது. ஆனந்தக் கண்ணீர் துளிர்க்கின்றது. தம்பி டி. கே. சண்முகத்தை நினைக்கும்போதும், இன்று பெருமைக்குரிய முதலமைச்சராய் வீற்றிருக்கும் மற்றொரு தம்பி புரட்சி நடிகர் எம். ஜி. ஆரை நினைக்கும்போதும், இதே நிலையில்தான் என்னுள்ளம் பெருமையில் பூரிக்கின்றது. உடல் இடம் கொடுத்தால் நிகழ்ச்சியில் கலந்துகொள்ள முயற்சிக்கிறேன்.

எனது மனப்பூர்வமான ஆசிகள் உனக்கு எப்போதும் உண்டு.

உன் அன்புச் சகோதரன்.

எம். கே. ராதா.



...மணியம் சுந்தரம் பிள்ளை



வெ. சாமிநாத சர்மா



கி. ஆ. பெ. விசுவநாதம்



சி. என். அண்ணா...



...கே முத்துசாமி



எஸ். டி. சுந்தரம்



அரு. இராமநாதன்



ப. நீலகண்டன்



...ந்தி கிருஷ்ணசாமி



தி. ஜானகிராமன்



யாயாவி



பா. ஆதிமூலன்



மு. கருணாநிதி



என். வி. ராஜாமணி



கா. மு. ஷெரீப



பா. கண்ணன்



அகிலன்



ரா. வேங்கடாசலம்



பி. எஸ் இராமையா



கு. அழகிரிசா



ரண-துரைக்கண்ணன்



கு சா கிருஷ்ணமூர்த்தி



புத்தனேரி சுப்பிரமணியம்



திருச்சி பாரதன்



ராம். சித்தராஜன்



ஸ்ரீ வேணுகோபாலன்



F. G. நடேச அய்யர்



இரா பழனிச்சா





வி. வி. ஜெயராமன்



என். எ. வேலாயுதம்



பட்டு



1. சி. எஸ். சொக்கலிங்கம் பிள்ளை
2. டி. எஸ். கண்ணுசாமி பிள்ளை
   (டி. கே எஸ். சகோதரர்களின் தந்தையார்)
3. கிட்டுப் பிள்ளை (அரச வேடம்)
4. ஆஞ்சநேய கோவிந்தசாமி நாயுடு
   (நாடகக் குழு)
   (வண்ணக் களஞ்சியம் புதுவை.)
5. வி. ஆர். ரத்தினசாமி நாயுடு
6. ஐ. கிருஷ்ணமாச்சாரி
7. அல்லி பரமேசுவர அய்யர்
8. ஜி. எஸ். முனுசாமி நாயுடு
   (அரிச்சந்திராவில்)
9. தஞ்சை ஜெகந்நாத ராவ்
10. ஆஞ்சநேய கோவிந்தசாமி நாயுடு



1. ஸ்ரீனிவாசப் பிள்ளை
2. மனமோகன அரங்கசாமி நாயுடு நாடகக் குழு
3. முருகேச நாயக்கர்
   (ஜலந்தர் கம்பெனி நடிகர்)
4. தூ. தா. சங்கரதாஸ் சுவாமிகள்
5. சி. எஸ். சாமண்ணா ஐயர்
6. எம். எம். சிதம்பரநாதன்
   (பாவலர் மாணவர்)
7. ஜி. சி. நம்மாழ்வார் ரெட்டி
8. ஆத்மலிங்கம் பிள்ளை











1. பைரவ சுந்தரம் பிள்ளை (அரிச்சந்திராவில்)
2. வி. பி. ஜானகி அம்மாள் (இராமாயணத்தில்)
   ஆஞ்சநேய சாரங்கபாணி நாயுடு
3. கே. எஸ். அனந்தநாராயண அய்யர் (ஞானசௌந்தரியில்)
4. எஸ். ஜி. கிட்டப்பா (பெண் வேடத்தில்)
5. வி. ஏ. செல்லப்பா
6. சக்திவேல் ஆச்சாரி
7. எம். எஸ். தாமோதர ராவ
8. அனந்தலட்சுமி
9. ஆர்மோனியம் வாசுதேவ நாயர்

















1. அரிச்சந்திரனுக மூக்க வேளார்
2. சுப்பையா ஆச்சாரி, சிதம்பர ஆச்சாரி
புதுவை சாமிநாத ஆச்சாரி
(பெண் வேடம்),
வடிவேலு ஆச்சாரி (பெண் வேடம்).
3. பி. எஸ், வேலு நாயர்,
கே. எஸ். அனந்தநாராயணன் (மனைவில்)
4. பி. யு. சின்னப்பா
5. ஹார்மோனியம் கே. எஸ். தேவுடு அய்யர்
6. ராஜா எம். ஆர். கோவிந்தசாமி பிள்ளை
7. டி. கே. முத்துசாமி
('கதரின் வெற்றி'யில்)
8. அங்கமுத்து அம்மாள்.



1. எஸ். எஸ். விசுவநாத தாஸ்
2. பார்ஸி லேடி எம். ஜி. தேவராஜு (பெண் வேடம்)
3. தென்காசி - சண்முகசுந்தரப் புலவர்
4. எல். நாராயண ராவ்
5. டி. எம். கமலவேணி
6. எஸ். வி. சுப்பையா பாகவதர்
7. வேலுப் பிள்ளை
8. மனமோகன அரங்கசாமி நாயுடு (அரச வேடம்)
9. கள்ளவேடம் நடராஜ ஆச்சாரி



1. திரௌபதை வஸ்திராபரணம்
   திரௌபதை—
   மனமோகன அரங்கசாமி நாயுடு
   துர்ச்சாதனன்—
   இராவண கோவிந்தசாமி நாயுடு
   துரியோதனன்—
   பி. எஸ். இராமச்சந்திரம் பிள்ளை
   சகுனி—ஆத்மலிங்கம் பிள்ளை
   விகர்ணன்—நடராஜக் கவி
2. நடராஜக் கவி (பெண் வேடம்)
3. காளி—என். இரத்தினம்
4. மனமோகன அரங்கசாமி நாயுடு (பெண் வேடம்)
5. கெ. டி. நடராஜ பிள்ளை
6. கெ. அரங்கநாயகி
7. டி. எம். காதர் பாட்சா
8. கே. பி. சுந்தராம்பாள்



1. சங்கரலிங்க நாடார் *(நாடக ஆசிரியர்)*
2. புஷ்ப லீலாவதி *(கந்தனுர் வேடம்)*
3. பி. பி. ரெங்காச்சாரி
4. எஸ். ஆர். கமலம்
5. எம். கே. தியாகராஜ பாகவதர்
6. எஸ். ஆர். ஜானகி
7. சி. எஸ். இரத்திருபாய்
8. எஸ். டி. சுப்புலட்சுமி
9. எஸ். எஸ். சாப்ஜான் *(பெண் வேடத்தில்)*
10. டி. பி. ராஜலட்சுமி































1. பால குருநாதப் பிள்ளை
2. ராஜா ஷண்முக தாஸ்
3. டி. கே. சங்கரன்
   (சந்திரகாந்தா நாடகத்தில்)
4. எம். ஜி. நடராஜப் பிள்ளை
5. நாகரத்தினம்பாள்
6. பாலாமணி அம்மாள்,
   T. D. ருக்குமணியம்மாள்
7. D. R. முத்துலட்சுமி
8. தானுவாம்பாள் (அரச வேடத்தில்)
9. ரங்கபாஷ்யம் நாயுடு, ராஜாமணி அம்மாள்
10. எஸ். பி. கமலாம்பாள்



கே. பி. சுந்தராம்பாள்



எம். கே. ராதா



எம். ஆர். ராதா



கே. ஆர். ராமசாமி



பி. எஸ். ஞானம்.



எம். ஆர். சந்தானலக்ஷ்மி



எஸ். டி. சுப்புலக்ஷ்மி



சி. டி. ராஜகாந்தம்



எம். என். ராஜம்



மனோரமா



எம். எஸ். திரௌபதை



டி. கே. சீனிவாசன்



திருவாரூர் ராமசாமி



கலைவன் எம். எஸ். சுந்தரம் (சாவி)



சந்திரசேகரன நர்சாதன



டி. டி. சீனிவாசன் (பரதன்)





. எஸ். அனந்தநாராயண ஐயர்



பம்மல் சம்பந்த முதலியார்



நவாப்

ராஜமாணிக்கம்



கந்தர்வ கான

எஸ். ஜி. கிட்டப்ப



காளி என் ரத்தினம்



கலைவாணர் என். எஸ். கே



ஔவை தி க. சண்முகம்



டி எஸ் பாலையா



டி. ஆர் ராமச்சந்திரன்



கே. சாரங்கபாணி



காகா. ராதாகிருஷ்ணன்



வி. கே. ராமசாமி



எம. என். நம்பியார்



எஸ் எஸ். சிவசூரியன்



சாயிராமன்



கே டி சந்தானம்

# சிறப்புரை

எஸ். மகராஜன்
(முன்னாள் உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதி)

'தமிழ் நாடக வரலாறு' என்ற இந்நூலை முதலிலிருந்து கடைசி வரையிலும் ஊன்றிப் படித்தேன்; வியப்பும் விம்மிதமும் அடைந்தேன். இந்நூலின் ஆசிரியர் கவிஞர் கு. சா. கிருஷ்ணமூர்த்தி, இங்கிலிஷ் பள்ளிக்கூடங்களில் படித்து பி.ஏ., எம்.ஏ. பட்டம் வாங்கியவர் அல்ல. நமது இங்கிலிஷ் பள்ளிக்கூடங்களில் உண்மையை நேரடியாகப் பார்க்கும் முறையைக் கைவிட்டு விட்டார்கள். புத்தகமே பிரதானம் என்று நினைத்து, இரண்டு கண்களையும் புத்தகத்தை வைத்து அடைத்துக்கொண்டு உலகத்தைப் பார்ப்போமானால், உலகம் எப்படித் தெரியும்? ரசிகமணி டி. கே. சி. சொன்னது போல், ஜியாலஜி (Geology) பூமிக்குள் இருக்கிறது, அஸ்ட்ரானமி (Astronomy) வானத்தில் இருக்கிறது, பாட்டனி (Botany) காட்டில் இருக்கிறது. இவை ஒன்றும் புத்தகத்தில் இருப்பதில்லை. ஓர் அழகிய பெண்ணைப் பார்த்து திருமணம் செய்ய விரும்புகிற ஒருவனுக்கு ஒரு பெண் பாடசாலையின் ஆஜர் அட்டவணையைக் கொடுத்து "எல்லாப் பெண்களின் பெயர்களும் இதில் இருக்கின்றன. எந்தப் பெண்ணை வேண்டுமானாலும் தேர்ந்தெடுத்துக்கொள்ளலாம்" என்று சொல்வதை ஒத்திருக்கிறது, உண்மையோடு உறவாடாது, வெறும் புத்தகத்தோடு உறவாடும் நமது படிப்பு முறை. இந்நூலாசிரியரோ மூன்றாவது வகுப்பு முற்றுப்பெறுவதற்கு முன்பே, ஒன்பதாவது வயதிலேயே பள்ளிக்கூடங்களிலிருந்து விடுதலை பெற்று, நாடகக் குழு ஒன்றிலே நடிகராகச் சேர்ந்து விட்டார். அந்த நடிகர் உலகத்திலே மனிதனுடைய குணங்கள் என்ன, அவனுடைய உணர்ச்சிகள் என்ன, அவனுடைய பாவங்கள் என்ன, எப்படி அவற்றைச் சொல்லிலே எடுத்துக்காட்ட முடியும், நாடகப் பாங்கு என்றால் என்ன, உரையாடுவது எப்படி, சுவைபட நடிப்பது எப்படி, இசையினாலும் நடிப்பினாலும் கேட்டுக்கொண்டிருக்கிற மக்களை

எப்படி எப்படியெல்லாம் களிப்பூட்டலாம், ஒவ்வொரு நடிகனும் தன்னுடைய தனிப் பெருமையைத் தேடிக்கொள்ளாமல் நடிகர் குழுவோடு கூட்டு முயற்சி செய்து நாடகத்துக்கு எப்படிப் பெருமையை ஈட்டலாம், ஒருவரோடொருவர் எவ்வாறு இங்கிதத்தோடு பழக வேண்டும், மக்களுடைய நாடியிலே கை வைத்து அதன் துடிதுடிப்பு என்ன என்பதை எவ்வாறு கண்டுகொள்ளலாம், அந்தத் துடிதுடிப்பை நாடகத்தில் வருகின்ற காட்சிகள் மூலமாகவும், செயல்கள் மூலமாகவும், சொற்கள் மூலமாகவும் எப்படிப் பிரதிபலிக்கலாம் என்பதையெல்லாம் நேருக்குநேர் சங்கரதாஸ் சுவாமிகள், பம்மல் சம்பந்த முதலியார் போன்ற மேதைகளுடைய நாடகக் குழுக்களில் குரு மூலமாகவும், அவர்கள் நடத்திய நாடகங்களிலே வேடங்கள் தாங்கி நடித்தும் ஐயந்திரிபறத் தெரிந்து கொண்டவர். ஆகவேதான் இந்த நூலில் தமிழ் நாடகம் சென்ற இரண்டாயிரம் ஆண்டுகளாக வளர்ந்து வந்த முறை பற்றியும், கேரளா, ஆந்திரா, கர்நாடகம் முதலிய அண்டை மாநிலங்களில் நாடகக்கலையின் தன்மை எப்படி இருந்தது என்பதைப் பற்றியும், சுதந்திரப் போராட்டக் காலத்திலே எஸ். எஸ். விஸ்வநாததாஸ் போன்ற தேசபக்த நடிகர்கள் நடிக்கும்போது, நாட்டுப் பற்ருேடு கொதித்தெழுந்து-சட்டத் தடைகளையெல்லாம் மீறி ராஜத்துரோகப் பாடல்களைப் பாடி அடிக்கடி தண்டனை பெற்று, சிறை புகுந்து, நாட்டின் விடுதலையைப் பெறுவதற்கு அவர்கள் எவ்வாறு உதவியாக இருந்தார்கள் என்பதைப் பற்றியும் உள்ள செய்திகளை அழகாக வகுத்தும் தொகுத்தும் காரிய காரணத் தொடர்போடு சுவையான தெள்ளத் தெளிந்த தமிழிலே எடுத்துக்கூறியும் பள்ளிக்கூடங்களில் சாதாரணமாக உருவாகாத ஒரு பெரும் புலமை தன்னிடம் இருக்கிறது என்பதை இந்நூலாசிரியர் நிலைநாட்டியிருக்கிருர்.

நிலநூல், இலக்கண நூல், மொழியியல் முதலியவற்றையெல்லாம் அடிப்படையாகக் கொண்டு ஆராய்ச்சி செய்த

வர்கள் தமிழ் மொழி முப்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமேயே தோன்றியிருக்க வேண்டும் என்று கருது கிறார்கள். ஹோமோ சேபியன்ஸ் (Home Sapiens) என்ற தற்கால மனித இனம் தோன்றி நாற்பத்தெட்டாயிரம் ஆண்டுகள் ஆகியிருக்க வேண்டும் என்று ஜூலியன் ஹக்ஸ்லி போன்ற விஞ்ஞானிகள் கருதுகிறார்கள் அப்படியானால், மொழியானது முப்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே பிறக்கத் தொடங்கியிருக்க வேண்டும். நடிப்பு என்பது கண்ணடிப்பதன் மூலமும் சமிக்ஞைகள் மூலமும் அபிநயங்கள் மூலமும் வெளிவருவது. அது மக்கள் பேசத் தொடங்குவ தற்கு முன்னமே வழக்கில் வந்திருக்க வேண்டும்.

நடிப்பு என்பது மனிதனிடத்தில் மாத்திரமல்ல, மிருக இனத்திற்கும் தாவர இனத்திற்கும் உரியது. விட்டில் பூச்சி களைக் கண்டால் பறவைகள் உடனே அவற்றைக் கொத்தி விழுங்கிவிடும். எதிரிகளிடமிருந்து தப்புவதற்காகவே விட்டில் பூச்சிகளுக்குப் பச்சை வண்ணத்தைப் பூசி பச்சை இலை களோடு பச்சை இலைகளாக மறைந்து வாழக் கற்றுக் கொடுத் திருக்கிறது இயற்கை. இதை mimicry in nature என்று சொல்வார்கள். ஒரு,பொருள் இன்னொரு பொருளைப்போல் நிறத்தாலும் வடிவத்தாலும் பாவனை செய்து தன்னுடைய எதிரியிடமிருந்து தப்பித்துக்கொள்கிறது; இவ்வாறு பாவனை செய்கிற பொருளை 'ஒப்பாரி'' என்று திருவள்ளுவர் சொல்லுவார்.

ஓர் எலியை விரட்டிச் செல்கிறது ஒரு பூனை, பொய்க்கடி கடித்து எலியைக் கவ்வுகிறது. உடனே மாய்ந்துவிட்டது போல் கிடக்கும் எலியை நம்புவதுபோல் பாவலா போடு கிறது பூனை; கண்ணை இறுக்கி மூடுவது போல அரைக் கண்ணைத் திறந்து வைத்துக்கொண்டு அசையாமல் எலியை அது பார்த்துக்கொண்டிருக்கிறது. அதுதான் சமயம் என்று தெரிந்து எலி கடுகி ஓடத் தொடங்குகிறது. கண்ணை மூடியது போல் நடித்துக் கொண்டிருந்த பூனை ஒரே பாய்ச்ச லாகப் பாய்ந்து எலியின் குரல்வளையை வாயினால் கவ்வு

கிறது; இப்படியாகப் பூனை—எலி நாடகம் தொடர்கிறது ஆகவே, மிருக—உலகத்திலும் நடிப்புக்கலை பயிலப்படுகிறது.

குழந்தைகள்—உலகத்தை எடுத்துக்கொண்டால், அங்கே பாவனு சக்தி மிக மிக அதிகம்; நம்முடைய உலகம் எங்கு முடிகிறது, கற்பனை உலகம் எங்கு தொடங்குகிறது என்ற வேறுபாடுகூட தெரியாத அளவுக்குப் பாவனு சக்தி குழந்தைகளிடம் நிரம்பியிருக்கிறது. ஒரு கொலையை நேரடியாகக் காணுத ஒரு சிறு குழந்தைக்கு அதன் கண்முன் கொலை நடந்ததாகவும், அப்போது நடந்த செயல்கள் இவை இவை என்றும் சொல்லி வைத்துவிட்டால், அக்குழந்தை யுடைய கற்பனைத் திரையிலே இந்தக் காட்சிகள் எல்லாம் படம் படமாகப் பதிந்துவிடும். உண்மையிலேயே பார்த்ததாக நினைத்துக்கொண்டு அந்தக் குழந்தை நீதிமன்றத்தில் வாக்கு மூலம் கொடுக்கும்போது குறுக்கு விசாரணை மூலம் குழந்தை சொல்லுவது கற்பனைதான் என்பதைக் காட்டுவதற்கு வழக் குரைஞருக்கு மிகுந்த திறமை வேண்டும்.

எண்சாண் உடம்புக்குள்ளே இருக்கிற ஒருவன் தன் உடம்பை மறந்து, தன்னை மறந்து, தன்னுடைய குணங்களை மறந்து, தன்னுடைய வாழ்வின் இறந்தகாலத்தையும் நிகழ் காலத்தையும் மறந்து, தன்னை வேருெரு பாத்திரமாகக் கற்பனை செய்துகொண்டு, அந்தப் பாத்திரத்தின் குண விசேஷங்களையும் பேச்சுமுறைகளையும் உள்ளச்சூழலையும் தனதாக ஏற்றுக்கொண்டு, தன் குரலைத் துறந்து விட்டு அந்தப் பாத்திரத்தினுடைய குரலை ஏற்று நடிப்பது என்பது யோக முறைப்படி சிறந்த சாதனையாகும். நல்ல எழிலும் இளமையும் தன்மையும் கொண்ட டி. கே. சண்முகம் தனக்கு இயல்பாக உள்ள உருவத்தையும் குணத்தையும் நடை உடை பாவனைகளையும் துறந்துவிட்டு, உடம்பெல்லாம் சுருக்கு விழுந்த, பல்லே இல்லாத, பொக்கு வாயான, தடி ஊன்றிய முதிய மேதை ஔவையாக மூன்றரை மணி நேரம் இடை விடாது நடிப்பதைப் பார்த்தவர்கள் நடிப்பு என்பது கூடு

விட்டுக் கூடுபாயும் ஓர் அரிய யோகக் கலே என்பதை உணர் வார்கள்.

ஒரு ரோஜாப்பூப் பதியை மண்ணிலே பொதிந்து வைத்து, அதற்கு உரம் போட்டு நீர் ஊற்றுகிருேம். அது மண்ணிலே வேரூன்றி விடுகிறது. தழைக்கவும் தொடங்கு கிறது. ஆனல், இரண்டு நாட்கள் கழித்து நாம் அதை வேரோடு பிடுங்கி, பத்தடிக்கு அப்பால் உள்ள மண்ணில் திரும்பவும் ஊன்றி வைக்கிருேம், உரம் போடுகிருேம், நீர் ஊற்றுகிருேம்; இன்னும் இரண்டு நாட்கள் கழித்து அதையும் வேரோடு பிடுங்கி இன்னேர் இடத்தில் ஊன்றி வைக்கிருேம். இப்படியாகப் பத்து தடவை செய்தால் அந்த ரோஜாப் பதி யினுடைய சத்து எல்லாம் மாண்டுவிடும். இதைப் போலத் தான் ஒரு நடிகன். 'நான்' என்ற ஆணவ உணர்வானது ஒவ் வொரு மனிதனுடைய எண்சாண் உடம்பிலும் வேரூன்றி நிற் கிறது. கைகேயி ராமனே வனத்துக்குப் போகும்படி ஆணே யிட்டு விட்டாள் என்று தெரிந்தவுடனே நாடக ஆசிரியன் கம்பன் தன்னுடைய எண்சாண் உடம்பில் வேர்விட்டுநிற்கிற தன் ஆணவத்தை வேரோடு பிடுங்கி லக்ஷ்மணன் என்ற பாத் திரத்திற்குள்ளேயே அதை நட்டுக்கொள்ளுகிருன்; லக்ஷ்மண ஞக நின்று உலகத்துக் கைகேயிகள் எல்லோரையும் எதிர்க் கிருன்; இவர்கள் ஒவ்வொருவரையும் கொன்று தீர்த்து, இவர்களுடைய பிணங்களேப் பூமியிலிருந்து வானமுகடு வரைக்கும் அடுக்கி வைக்கப் போகிறேன் என்று வீராவேசம் பேசுகிருன். இப்படிப் பேசுவது லக்ஷ்மணனு? இல்லே லக்ஷ்மண னுடைய கூட்டில் புகுந்திருக்கிற கம்பன். இந்தக் கம்ப லக்ஷ் மணனுடைய ஆவேசத்தைக் கண்ட ராமன், அவனுடைய கோபாக்கினியைத் தணிப்பதற்காகப் பன்னீர்த்துளி போன்ற தன்னுடைய சொற்களே அன்போடும் அமைதியோடும் தெளித்துக்கொண்டு வருகிருன், ''நதியின் பிழையன்று நறும் புனல் இன்மை'' என்று சொல்லுகிருன். ''அதோ நம்முடைய காவிரி ஆற்றிலே தண்ணீர் வரவில்லேயென்ருல், ஆற்றையா நொந்துகொள்வது? மெர்க்காராவில் மழை பெய்யவில்லே,

அதனால் ஆற்றில் தண்ணீர் வரவில்லை. மெர்க்காராவில் மழை பெய்யவில்லையென்றால் அதற்குக் காரணம் ஆப்ரிக்காவில் உள்ள சகாராவில் வெயில் அடிக்கவில்லை. அங்கு வெயில் அடிக்காததற்குக் காரணம் சூரிய மண்டலத்திலே சில கோளாறுகள் ஏற்பட்டிருக்கின்றன. ஆகவே, கைகேயி என்னை வனத்திற்குப் போகச் சொல்லியிருக்கிறாள் என்றால், அவள் பேரில் தவறு இல்லை. அதற்கான காரணத்தைப் பல ஊழிகளாக நடந்துவரும் செயற்சங்கிலித் தொடரிலே போய் நாம் காண வேண்டும். அதற்குப் பெயர் விதி. இதைத் தெரியாமல், தம்பி லக்ஷ்மணா, நீ கைகேயியின் மேல் வெகுளலாமா? விதியின் பிழை, அதற்கு என்னை நீ வெகுண்டது" என்றான். இப்படி ராமனா சொன்னான்? இல்லை, லக்ஷ்மணனுடைய கூட்டில் புகுந்திருந்த கம்பன் ராமனுடைய கூட்டில் புகுந்துகொண்டு இப்போது பேசுகிறான்; கருணையோடு பேசுகிறான். இதைக் கேட்டுக் கொண்டிருந்த லக்ஷ்மணனுக்குச் சீற்றம் அதிகரிக்கிறது. "விதியாவது மண்ணாங்கட்டியாவது. விதி, விதி என்று சொல்லுகின்றாயே, அதனுடைய மண்டை ஓட்டிலே அதனுடைய விதியை எழுதத் தெரியும் என்னுடைய வில்லுக்கு. பார், இந்த வில்லின் வேலையை. விதிக்கும் விதியாகும் விற்றொழில் காண்டி." என்றான்.

இப்படிச் சொன்னது லக்ஷ்மணனா? உடலுக்குள்ளே புகுந்த கம்பன் பேசுகிறான். ரோஜாப்பூப் பதியைப் பற்றி முன்னமேயே சொன்னோம். அதைப் பல இடங்களில் ஊன்றி ஊன்றி வேரோடு எடுத்தால் அது உயிரற்றுப் போகிறது. அதைப் போலவேதான் மனிதனின் ஆணவமும். அந்த ஆணவம் நாடகக் கவிஞனுடைய எண்சாண் உடம்புக்குள்ளே வேரூன்றி நிற்கிறது. அதை வேரோடு பிடுங்கிவிட்டு கவிஞன், லக்ஷ்மணன் என்ற பாத்திரத்திற்குள்ளேயே அதை நடுகின்றான். நட்டபின் அதற்கு ஊட்டம் கொடுக்கிறான். லக்ஷ்மண பாத்திரம் பேசிக்கொண்டு இருக்கும்போதே தன்னுடைய ஆணவத்தை வேரோடு பிடுங்கி, லக்ஷ்மணனுடைய கூட்டிலிருந்து வெளிக்கொணர்ந்து, ராமனுடைய

கூட்டில் நட்டு வைக்கிறான் கம்பன். ராமனாக இருந்து விதியைப் பற்றி அருள் கனியப் பேசிய பிறகு, திரும்பவும் வேரோடு தன்னைப் பிடுங்கி லக்ஷ்மண பாத்திரத்தில் நட்டுக் கொண்டு, சீறுகிறான் கம்பன். இவ்வாறு செய்கிறவன் நாடக ஆசிரியனானாலும் சரி, நடிகனானாலும் சரி, நாளாவட்டத்தில் தன்னுடைய பாவனா சக்தியின் மூலம், தனக்கே உரிய ஆணவத்தை இழந்துவிடுகிறான். இந்தப் பெரும் பயிற்சி பெற்றவர்களுக்கு மற்றவர்களிடத்திலே எல்லையற்ற அன்பும் பரிவும் கருணையும் இருப்பது இயல்பு. ஆகவேதான் நடிப்புத் துறையிலே உள்ளவர்களுக்கு நேர் பார்வை இருப்பதோடு, நல்ல பண்பும், மக்களுக்கு நன்மை செய்ய வேண்டும் என்ற ஆசையும், அந்த ஆசையை நிறைவேற்றுவதற்கு உள்ள திறமையும் இருக்கின்றன. இவர்கள் இன்னும் கொஞ்சம் பாவனா சக்தியை வளர்த்தார்களானால், ஞான நிலையையே அடைந்துவிடலாம். இதைத்தான் ஒரு ஞானி சொன்னார்:

"யானாகிய என்னை விழுங்கி வெறும்
தானாய் நிலை நின்றது தற்பரமே."

இங்கிலண்டிலே பெல்மனாமீட்டர் போன்ற ஒரு கருவியை இருபது ஆண்டுகளுக்கு முன்னால் கண்டுபிடித்தார்கள். சாதாரணக் கூலி வேலை செய்கிறவன் அந்தக் கருவியின் ஓர் உறுப்பை நோக்கி விழித்தானேயானால், அது 200 டிகிரி என்று அவனுடைய உள்ளத்தின் ஆற்றலைக் காட்டும். அறிஞர்கள், பேராசிரியர்கள் முதலியோர் அதை நோக்கி விழித்தால், அது 400 டிகிரி காட்டியது. கவிஞர்கள் கலைஞர்கள் ஆகியோருக்குச் சுமார் 500 டிகிரி உள்ளத்தின் ஆற்றல் இருப்பதாக அது காட்டியது. ஆனால், சிறந்த நடிகர்கள் அதைப் பார்த்து விழிக்கும்போது அவர்களுடைய உள்ளத்தின் ஆற்றலை 800 டிகிரி, 900 டிகிரி வரை காட்டியது. இதிலிருந்து நடிப்புக்கலை எவ்வளவு ஆற்றல் வாய்ந்தது, அந்தக் கலையில் தேர்ச்சி பெற்றவர்களை அது அவ்வளவு உன்னத நிலைக்குக் கொண்டு செல்கிறது என்பது தெரிகிறது.

இந்நூலாசிரியர் பத்தொன்பதாவது நூற்ருண்டில் தமிழ்நாடக நடிகர்கள் ஒழுக்கமற்றவர்களாக இருந்தார்கள் என்றும், சமுதாயம் அவர்களை வெறுத்து இழிவுபடுத்தியது என்றும் பல இடங்களில் எடுத்துச் சொல்லியிருக்கிருர். இந்த நிலை நாடகக்கலைக்கு எல்லா நாடுகளிலுமே இருந்து வந்திருக்கிறது. கி. பி. 1572ல் இங்கிலிஷ் பாராளுமன்றத்தில் ஒரு சட்டம் போட்டார்கள். நாடகத்தில் பங்கெடுக்கும் நடிகர்களைக் குட்டையில் அடைத்து, சிறையிலிட்டு, சவுக் காலடி;ந்து :தண்டிக்கலாம் என்று அந்தச் சட்டத்தில் கண்டிருந்தது. கீழ்த்தரமான மனித உணர்ச்சிகளை நாடகங்கள் சித்தரித்ததால் அவற்றைச் சட்டபூர்வமாகத் தடுக்க முயன்ருர்கள். ப்ரான்ஸ் நாட்டிலும் ஏறக்குறைய இதே நிலைதான். நடிகர்கள் இறந்தால், பாதிரிமார்கள் அவர்களுக்குக் கடைசிச் சடங்குகள் செய்ய மறுத்தார்கள். 17ஆவது நூற்ருண்டில் மோலியர் என்ற சிறந்த நாடக ஆசிரியர் இறந்தபோது, கிறிஸ்தவ சமயச் சடங்குகளை அவருக்குச் செய்ய மறுத்துவிட்டார்கள்.

ஒரு முறை பார்பேஜ் என்ற ஒரு பெரிய நடிகர் மூன்ருவது ரிச்சர்ட் என்ற ஷேக்ஸ்பியர் நாடகத்தை நடித்துக்கொண்டிருந்தபோது நாடக அரங்குக்கு வந்த ஓர் பெண், பார்பேஜின் அரசு எழிலைக் கண்டு மயங்கி, அவனை அடுத்த இரவே தன் வீட்டிற்கு வரவேண்டும் என்று ரகசியமாக அழைத்ததாகவும், அவ்வாறு வரும்போது தன்பெயரை மூன்ருவது ரிச்சர்ட் என்றும் அறிமுகப்படுத்திக் கொண்டு வரவேண்டும் என்றும் கேட்டுக்கொண்டதாகவும், இந்தப் பேச்சை ஒட்டுக் கேட் க்கொண்டிருந்த நாடகக் கவிஞர் ஷேக்ஸ்பியர், அவள் குறித்த நேரத்திற்கு முன்னமேயே தானே அந்தப் பெண்ணின் வீட்டிற்கும் போய் அவளோடு சல்லாபங்கள் செய்து கொண்டிருந்ததாகவும், பிறகு, குறித்தநேரத்தில் "மூன்ருவது ரிச்சர்ட்" அந்தப் பெண்ணின் வீட்டு வாசலில் வந்து காத்து இருப்பதாகச் செய்தி வந்ததாகவும், இதைக் கேட்ட ஷேக்ஸ்பியர், "மூன்ருவது

ரிச்சர்டுக்கு முன் வெற்றிவேந்தன் வில்லியம்* (William, the Conqueror) இங்கு வந்திருக்கிறேன்'' என்று பார்பேஜுக்குச் சொல்லியனுப்பினதாகவும் 'நாகரிகத்தின் கதை' என்ற நூலின் ஏழாவது பாகத்தில் 81 ஆவது பக்கத்தில் வில் டியூராண்ட் (Will Durant) சுவையோடு குறிப்பிட்டிருக்கிறார். ஆகவே, நாடக மகாகவி ஷேக்ஸ்பியரே ஒழுக்கங்களுக்குள் அடைபட்டு நிற்க மறுத்தார் என்று தெரிய வருகிறது.

நாளாவட்டத்தில் நடிகர்களுடைய ஒழுக்க வளர்ச்சியாலும் கட்டுப்பாட்டாலும் அவர்களுடைய அந்தஸ்து உயர்ந்துகொண்டே போயிற்று. இங்கிலண்டிலே பெரிய நடிகர்களுக்குச் 'சர்' பட்டம் கொடுத்துப் போற்றினார்கள். இருபதாவது நூற்றாண்டில் நமது தமிழ்நாட்டில் நடிகர்களுக்கு நாடகப் பள்ளிக்கூடங்களில் பயிற்சி கொடுத்து, ஒழுக்க சீலர்களாக ஆக்குவதற்கும் பெருமுயற்சி செய்தவர்கள் சங்கரதாஸ் சுவாமி பம்மல் சம்பந்தனார், முத்துசாமிக் கவிராயர், ஏகை சிவசண்முகனார், கிருஷ்ணசாமிப் பாவலர், கந்தசாமி முதலியார், சி. கன்னையா, ஜகன்னாத ஐயர், டி. கே. எஸ். சகோதரர்கள், நவாப் ராஜமாணிக்கம் பிள்ளை முதலியோர் என்ற உண்மையை எடுத்துக் கூறியிருக்கிறார் இந்த நூலாசிரியர். இந்த நாடகப் பள்ளிக்கூடங்களில் உருவாகிய ஒருவர் தமிழ்நாட்டின் முதலமைச்சராக ஆகியிருக்கிறார் என்றால், நாடகக் கலைஞர்களுக்கு இந்த நூற்றாண்டில் எவ்வளவு பெருமையும் செல்வாக்கும் ஏற்பட்டிருக்கின்றன என்பதை அறிந்து கொள்ளலாம்.

நடிப்புக் கலையைச் சொல்லிக் கொடுப்பதிலே தமிழ் நாடக ஆசிரியர்கள் எவ்வளவு அக்கறை எடுத்துக்கொண்

* ஷேக்ஸ்பியருடைய முழுப் பெயர் வில்லியம் ஷேக்ஸ்பியர் என்பதையும், மூன்றாவது ரிச்சர்ட் என்ற ஆங்கில அரசனுக்குக் காலத்தால் முந்தியவன் வெற்றிவேந்தன் வில்லியம் (William, the Conqueror) என்பதையும் கவனத்தில் வைத்துக்கொண்டால்; ஷேக்ஸ்பியர் பார்பேஜுக்குச் சொல்லி அனுப்பிய தகவலில் உள்ள நகைச்சுவை பிடிபடும்.

டார்கள் என்பதைப் பற்றி இந்த நூலில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பதினைந்தாவது, பதினாறாவது நூற்றாண்டுகளில் இங்கிலண்டில் நடந்த நாடகங்களில் பெரும்பாலும் இயல்புக்கு விரோதமாக நடிகர்கள் நடித்து வந்தார்கள். 'கா...கூ' என்று தொண்டையைக் கிழிப்பதும், உணர்ச்சிகளை நிதானமில்லாமல் எடுத்துக் காட்டுவதுமே நடிகர்களுக்கு இலக்கணம் என்று மக்கள் கருதி வந்தார்கள். இந்தக் குறைபாடுகளை 'ஹாம்லெட்' என்ற நாடகத்திலே உலக மகாகவி ஷேக்ஸ்பியர் கடுமையாகக் கண்டிக்கிறார்; ஹாம்லெட் நடிகர்களுக்குக் கீழ்க்கண்டவாறு உபதேசம் செய்கிறார்:— "சொற்கள் நாக்கிலே சுகமாக உருள வேண்டும். காற்றைப் போட்டு ரம்பத்தால் அறுப்பது போல், இப்படிக் கையை ஆட்டாதீர்கள். மென்மையாக மெய்ப்பாடுகளைக் காட்டுங்கள். உணர்ச்சி, மழையாகப் பெய்யலாம். புயலாக அடிக்கலாம். சூறாவளியாகச் சுற்றிக் குமுறலாம். ஆனால், அப்படி அடிக்கும்போதும், நிதானத்தைக் கைவிட்டு விடாதீர்கள். நிதானமிருந்தால்தான் நடிப்புக்கு ஒரு மெருகு உண்டாகும். டோப்பா அணிந்த தடியர்கள் உணர்ச்சிகளைக் கிழித்தெறிந்து கூளமாக்கிக் கேட்பவர்களுடைய காதைப் பிளக்கும்போது, என் ஆன்மா பதை பதைக்கிறது. கேட்கும் தரை மகா ஜனங்களோ அர்த்தம் புரியாத ஊமை நாடகத்தையும் கூப்பாட்டையுந்தான் ரசிப்பார்கள். அதற்காகச் 'சப்'பென்று நடக்காதீர்கள். உங்கள் பகுத்தறிவு சொல்வதைக் கவனித்து நடியுங்கள். நடிப்பின் நோக்கம் என்னவென்றால், இயற்கைக்குக் கண்ணாடி காட்டுவதுதான்; அறத்தின் முகபாவத்தை அறத்துக்கே எடுத்துக் காட்டிவிடுங்கள்; இழிவின் உருவத்தை இழிவுக்கே எடுத்துக் காட்டிவிடுங்கள்; தற்காலச் சமூக நிலையைச் சமூகத்துக்கே எடுத்துக் காட்டிவிடுங்கள். இதுதான் நடிகர்கள் செய்ய வேண்டிய வேலை."

இந்நூலாசிரியர் சென்ற ஒரு நூற்றாண்டு காலமாகத்தான் தமிழ் நாடக மேடையில் பெண்கள் நடித்து வருகிறார்கள் என்றும், அதற்குமுன்னால் ஆண்களே பெண்வேடம்

தாங்கி மிகச்சிறப்பாக நடித்து வந்தார்கள் என்றும், பின்னல் பெண்களும் ஆண் வேடம் தாங்கித் திறமையாக நடித்து வந்தார்கள் என்றும் குறிப்பிட்டிருக்கிருர். இப்படிக் குறிப்பிட்டுவிட்டு, குடந்தையில் நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன் நடந்த ரசமான நிகழ்ச்சி ஒன்றையும் கீழ்க்கண்டபடி விவரிக்கிருர்:—

> "மற்றுமோர் அருமையான நிகழ்ச்சி. சுமார் நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன் குடந்தையில் நடந்தது. கே. பி. சுந்தராம்பாள் வேலனுகவும் வேடனுகவும் விருத்தனுகவும், எஸ். ஜி. கிட்டப்பா ஸ்ரீவள்ளியாகவும் நடித்தார்கள். இருவருக்குமுள்ள உறவும் ஊடலும் ரசிகர்கள் அனைவருக்கும் தெரியும். இருவரும் போட்டி போட்டுக் கொண்டு பாடுவதும் பேசுவதும் ஒருவரொடொருவர் சீண்டுவதும் ரசிகர்களை ஆனந்தச் சாகரத்தில் ஆழ்த்தி, விஞடிக்கு விஞடி மகிழ்ச்சி ஆரவாரத்தில் திளைக்கச் செய்தன. இத்தகைய இனிய அற்புதக் காட்சிகளையெல்லாம் இனி எங்கே காணப் போகிருேம்."

இந்த நாடகத்தை நானும் நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன் குடந்தை நாடகக் கொட்டகையில் பார்த்து மகிழ்ந்தேன். ஆசிரியரைப்போல எனக்கும் இந்த நிகழ்ச்சி பழைய நாடக நினைவு ஊற்றுகளையெல்லாம் திறந்து வைக்கிறது.

ஐரோப்பிய நாடக மேடையில் பதினேழாவது நூற்றுண்டுக்கு முன் பெண்கள் நடிக்கும் வழக்கமே இல்லை. பதினேழாவது நூற்றுண்டில் ரிஷ்லியூவுடைய (Richelieu) அனுமதியின் பேரில் பாரீஸில் தொடங்கினுர்கள்.

ப்ரான்ஸில் மோலியர் என்ற நாடக ஆசிரியர் நடிகராகவும் இருந்தார். நாடகங்களை நடத்துவதற்குமுன் அவர் பல ஒத்திகைகள் நடத்தி, நடிகர்கள் இயல்புக்குமீறி நடித்தால் அவர்களைக் கண்டித்தும் திருத்தியும் வந்தார்.

இங்கிலண்டில் இயல்பாக நடிக்கும் கலை 18-ஆவது நூற்றுண்டில்தான் வளரத் தொடங்கியது. ப்ரான்ஸில் 17-வது நூற்றுண்டில் மோலியர் செய்த நடிப்புப் புரட்சியை 18-ஆவது நூற்றுண்டில் இங்கிலண்டில் கேரிக் (Garrick) என்ற நடிகர் செய்தார். அவர் நடிப்பு மிக மிக இயல்பாக இருந்தது. அவருடைய உடலமைப்பும் முகவெட்டும் நுண்ணிய உணர்ச்சிகளை மெருகிட்டுக் காட்டுவதற்கு வாய்ப்பாக இருந்தன. Character-acting, அதாவது, குணச்சித்திர நடிப்பு **கேரிக்** காலத்தில்தான் வளர ஆரம்பித்தது. நடிகன் தன்னையும் தன்னுடைய குணங்களையும் மறந்து, தான் நடிக்கும் பாத்திரத்தோடு பாத்திரமாகக் கலந்து, பாத்திரத்தில் குண விசித்திரங்களை உண்மையோடு எடுத்துக் காட்டுவதே கலை என்பதை ஆங்கில நடிகர்கள் கேரிக் மூலம் அறிந்தார்கள்.

ஆனால், தமிழ் நாட்டில் எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளாக இந்தக் கலையைப் பரத நாட்டியத்தில் நுணுக்கமாகக் காட்டி வந்திருக்கிறார்கள். பார்க்கப் போனால், ஒவ்வொரு பதமும் ஒரு நாடகமாயிருக்கும். நடனமாடும் பெண் தன்னை மறந்து, நாடகப் பாத்திரமாக மாறி, பாத்திரத்தின் உணர்ச்சிகளை முகத்தில் தேக்கி, விரல்கள் மூலமாகவும், கண் அசைவின் மூலமாகவும், முகபாவங்களின் மூலமாகவும் காட்டும் அற்புதமானது உலக நாடக மேடைகளில் எங்குமே காண முடியாத அற்புதம். இந்தக் கலையை வளர்த்து வந்த நட்டுவர்களுக்கும் கணிகையருக்கும் கலையுலகம் என்றென்றும் கடமைப்பட்டிருக்கிறது.

ஆனால், நாடக மேடைக்குரிய புறக்கருவிகளையும் தட்டு முட்டுக்களையும் நாம் சரியாக வளர்க்கவில்லை. நாடக அரங்குகளை வசதியாக மேல்நாட்டு முறையில் கட்டுவதிலோ, காட்சி ஜோடனைகளைத் திருத்தி அமைப்பதிலோ நம் முன்னோர்கள் அதிகக் கவனம் செலுத்தவில்லை.

கிரேக்க நாட்டிலும் நாடகத்திற்கு வேண்டிய புறக் கருவிகளை அவ்வளவாக வளர்க்கவில்லை. Aeschylus என்பவர் எழுதிய 'Suppliants' என்ற நாடகம் கிறிஸ்து பிறப்பதற்கு முன் 484-ஆவது ஆண்டில் அரங்கேற்றப் பட்டது. பெரும்பாலும் மலையடிவாரத்திலே நின்று கொண்டு நடிகர்கள் நடித்தார்கள்; ரசிகர்கள் மலைச்சரிவிலே உட்கார்ந்து கொண்டு கீழே தரையிலே நடக்கும் நாடகங் களைப் பார்த்துக் களிப்பார்கள். கி. மு. 4-ஆவது நூற்றாண் டில் கல்லிலே ஆசனங்கள் செய்து 14,000 பேர்கள் உட் கார்ந்து ரசிக்கக் கூடிய நாடகக் கொட்டகைகளைக் கட்டினார் கள். ஆனால், நடிகர்கள் முகமூடி தரித்து நடித்தார்கள். ஆகையால், நுணுக்கமான பாவங்களையெல்லாம் எடுத்துக் காட்ட அவர்களால் முடியவில்லை. Agatharchus என்ற கிரேக்க ஓவியர் கி. மு. 5-ஆவது நூற்றாண்டில் திரைச்சேலை களில் வண்ணப்படங்களைத் தீட்டி நாடக மேடையில் தொங்கவிட்டு, ஒரு புதிய சகாப்தத்தைத் தொடங்கினார்.

கி. பி. 2ஆவது நூற்றாண்டில் எழுதப்பட்ட சிலப்பதி காரத்தில் கண்ட குறிப்புகளிலிருந்து தமிழ்நாட்டிலுள்ள நாடக அரங்குகளிலும் பல அரங்குத் தந்திரங்களைக் கையாண்டிருக்கிறார்கள் என்று இந்நூலாசிரியர் தெரிவிக் கிறார். 'ஒருமுக எழினி' என்னும் ஒரு வகைத் திரை யிருந்தது; அதாவது, அரங்கில் ஒருபுறமிருந்து எதிர்ப்புறம் பாய்ந்து அரங்கை மறைக்கும் திரை. 'பொருமுக எழினி' என்று இன்னொரு வகைத் திரையிருந்தது; அதாவது, இரு புறங்களிலிருந்தும் எதிர்த்தெதிர்த்து வந்து நடுவில் ஒன்று கூடும் திரை. மூன்றாவது, 'கரந்துவரல் எழினி' என்று ஒரு வகை; அது இருக்கும் இடம் பார்ப்போருக்குத் தெரியாமல் தந்திரமாக மறைக்கப்பட்டிருக்கும். கீழிருந்தோ மேலி ருந்தோ எங்கிருந்தோவந்து இந்தத் திரை திடீரென்று அரங் கத்தை மறைத்துக் கொள்ளும். அரங்கத்திலுள்ள தூண் களின் நிழல் அரங்கத்தில் விழாமல் பார்த்துக் கொள்வார் களாம். 'தூண் நிழல் புறப்பட' என்று இதைக் குறிப்பிடு

கிறார், சிலப்பதிகார ஆசிரியர். மேடையிலே "மாண்" விளக்கு இருக்குமாம். அந்த விளக்கின் ஒளியிலே தூண் களின் நிழல் தெரியாமல் போய்விடும். அரங்கின் விதானத் திலே ஓவியங்கள் தீட்டப்பட்டிருக்குமாம். மேடையிலே வரிசை வரிசையாக முத்துச்சரங்கள் தொங்கும் என்று வருணிக்கிறார் இளங்கோவடிகள்.

மேல் நாட்டில் நம்மைக் காட்டிலும் காட்சிகளை அதிக மாகப் போற்றி வளர்த்தார்கள். வரலாற்று நாடகங்களை மிக்க கவனத்தோடு தயார் செய்தார்கள். வரலாறு நடந்த காலத் தில் மக்களுடைய பேச்சுமுறை எப்படி இருந்தது, அவர் களுடைய உடைகள் எப்படி இருந்தன என்பதையெல்லாம் பற்றிச் சிறந்த இலக்கியப் புலவர்களுக்கும் வரலாற்றுப் புலவர்களுக்கும் பெரும் பணம் கொடுத்து ஆராய்ச்சி செய்து, அந்த ஆராய்ச்சியின் பலனை நாடக மேடையில் விஞ்ஞான முறையில் பயன்படுத்தினார்கள். இங்கிலண்டில் 1850ல் சார்ல்ஸ் கீன் (Charles Kean) என்பவர் இந்த முறையைக் கையாண்டார். மெய்க்குதிரைகளையும், மெய்ப் பட்டாளங்களையும் நாடகமேடையில் நடமாடவிட்டார். இப்படிச் செய்வதன் மூலம் மனித வாழ்க்கையை அப்படி அப்படியே காட்டலாம் என்று நம்பினார். 1901-ஆம் ஆண்டில் லண்டினில் ட்ரூரிலேன் (Drurylane) தியேட்டரில் ஒரு நாடகம் நடந்தது. அதிலே செருப்புத் தைப்பவன் ஒருவன் பாத்திரமாக வந்து மேடையிலே நின்றான். ஒரு பிரபு வினுடைய காலுக்கு அவன் செருப்புத் தைக்க வேண்டும். பிரபுவும் அங்கே வந்து நின்று, அவருடைய காலைத் தூக்கி வைத்தார். அதனுடைய அளவுகளைச் செருப்பு தைப்பவன் எடுத்த துல்லியமும் பாங்கும் எல்லோருடைய கவனத்தையும் ஈர்த்துவிட்டன. அந்தச் செம்மானை எல்லோரும் கைதட்டிப் பாராட்டினார்கள். ஆனால், அவன் நடிகன் அல்ல; தினந் தோறும் லண்டன் தெருக்களில் செருப்பு தைக்கும் தொழிலை நடத்திக் கொண்டு இருந்தவன். இவனைக் கொண்டு வந்து ஒரு பாத்திரமாக அந்த நாடகத்தில் நிறுத்தியதைத் தவறு

என்றும், கலையையே கொச்சைப்படுத்தி விட்டார்கள் நாடகக்காரரர்கள் என்றும் Times' Literary Supplement என்ற பத்திரிகை இதைக் கண்டித்து தலையங்கமே எழுதியது.

20 ஆவது நூற்றாண்டின் தொடக்கத்தில் எட்வர்ட் கார்டன் க்ரெய்க் (Edward Gordon Craig) என்ற ஆங்கிலேயர் மேற்சொன்ன நாடகத் துறையிலுள்ள யதார்த்த வாதத்தை எதிர்த்தார். வாழ்க்கையைப் பச்சை பச்சையாகக் காட்டுவதில் பொருள் இல்லை, அடையாள பாஷை மூலமாகவும், ஜாடையாகவும் உண்மைகளை எடுத்துச் சொல்ல வேண்டும் என்று அவர் வற்புறுத்தினர்.

அபிநயத்தில் உலகப் புகழ் பெற்ற பாலசரஸ்வதியின் கலையில் இந்த உண்மைகளைக் கண்டு மகிழலாம். 'அன்ன நடையோ' என்ற சொற்றொடருக்கு நடந்து காட்டி அபிநயம் பிடிப்பார். அதைப் பார்க்கும்போது அன்ன நடையின் முக்கிய அம்சங்கள் எல்லாம் வெளிவந்துவிடும். பிறகு உட்கார்ந்து கொண்டே நடிக்க ஆரம்பிப்பார். கைகளை மாத்திரம் ஆட்டி அன்ன நடையைக் காட்டி விடுவார். முன்னைய அபிநயத்தைக் காட்டிலும் பின்னையது கற்பனை உள்ளவர்களுக்குக் களிப்பூட்டுவதாக இருக்கும்; கடைசியாகக் கால்களையும் ஆட்டாமல், கைகளையும் ஆட்டா மல், உடம்பும் அலுங்காமல் இரண்டு கண்களை மட்டும் ஆட்டி அன்னநடையைக் காட்டிவிடுவார் பாலசரஸ்வதி. அவ்வாறு அவர் செய்யும்போது கலையின் மெய்யான சிகரத்தையே அவருடைய அபிநயம் தொட்டுவிடும்.

கலை உலகத்தில் ரசிகர்களுடைய கற்பனைக்கும் இடம் தரவேண்டும். ஜப்பானில் 'நோ' (No) என்றும், 'கபூகி' (Kabuki) என்றும் இரண்டுவிதமான நாடக அரங்குகள் இருக்கின்றன. 'நோ' அரங்கு படாடோபமில்லாத எளிமை யான அரங்கு. நடிகர் கையில் வைத்திருக்கும் விசிறியைக் கத்தியாகவும், கோப்பையாகவும், பேனாவாகவும் உபயோ கிப்பார்; அபிநயத்தின் மூலம் பல பொருள்களைக் கலைச்சுவை

யோடு காட்டுவார்கள். ரசிகர்களுடைய கற்பனை வளத்தைப் பெருக்குவதற்கு இப்பேர்ப்பட்ட நாடகங்கள் துணை செய்கின்றன.

சீனுவிலும் நாடகக்கலை 2500 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே வளர்ந்து வந்திருக்கிறது. கி. பி. 8-ஆவது நூற்றாண்டில் 'தாங்' (T'ang) மன்னர்கள் காலத்தில் நடிகர்களுக்கென்று ஒரு பள்ளிக்கூடம் நடத்தி, அதில் 300 ஆடவர்களுக்கு நடிக்கவும் பாடவும் கற்றுக் கொடுத்தார்கள்.

வட இந்தியாவிலும் மன்னர்களுடைய ஆதரவில் நாடகக் கலை வளர்க்கப்பட்டிருக்கிறது. தமிழ்நாட்டிலும் நாடகத்துக்குத் தனிப் பெருமை கொடுத்திருக்கிறார்கள். இயல் தமிழ், இசைத் தமிழ், நாடகத் தமிழ் என்ற பாகுபாட்டிலிருந்தே தமிழ் மொழியில் மூன்றில் ஒன்றைச் சீதனமாகத் தமிழ் நாடகத்துக்கு நம் முன்னோர்கள் கொடுத்திருக்கிறார்கள் என்று தெரிகிறது. சங்க காலத்தில் பாடினிகளும் பாணர்களும் கூத்தர்களும் நாடகத்தை வளர்த்திருக்கிறார்கள். 8, 9-ஆவது நூற்றாண்டிலே பல்லவ அரசர் ஒருவர் சிறந்த நாடகங்களை இயற்றியிருக்கிறார். நொண்டி நாடகம், லாவணி முதலிய பலவகை நாடகங்கள் தமிழ்நாட்டில் இருந்திருக்கின்றன என்பதையும் இந்த நூல் நமக்கு எடுத்துக் காட்டுகிறது. எல்லா நாடுகளிலும் எல்லா மக்களும் நாடகத்தைச் சுவைத்திருக்கிறார்கள். அந்தக் கருவி கீழான உணர்ச்சிகளைத் தூண்டும்படி சில சமயங்களில் பயன்பட்டிருக்கிறது. இந்த அற்புதக் கருவியை மனித வாழ்க்கையைப் புனிதப்படுத்தும் கருவியாகப் பயன்படுத்த வேண்டுமென்பதே இந்த நூலாசிரியரின் ஆசை. அழகாகவும் சுவையாகவும் புலமையோடும் இந்நூலை எழுதியுள்ள அவருடைய ஆசை வெகு விரைவில் நிறைவேறுமாக. தமிழர்கள் இந் நூலை ஆழ்ந்து படித்துப் பயனுறுவார்களாக.

எஸ். மகராஜன்

# ஆய்வுரை

## (சிலம்பொலி சு. செல்லப்பன்)

### முத்தமிழின் ஒன்றியம்

தமிழ் மொழி இயல், இசை, நாடகம் என முப்பிரிவுகளைக் கொண்டது. இதனைப் பிங்கல நிகண்டு,

> "இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத் தமிழெனு.
> வகைப்படச் சாற்றினர் மதியுணர்ந் தோரே"

என்று குறிப்பிடும். இலக்கியமும் இலக்கணமும் அடங்கியது இயற்றமிழ்; பண்ணொடு கூடிய பாடல்களையுடையது இசைத்தமிழ்; ஒரு கதையை அல்லது செயலை உரிய கதை மாந்தர்களைக் கொண்டும், உரையாடல்களை அமைத்தும், பாடல்களைப் பாடியும் மெய்ப்பாட்டுடன் பிறர்க்கு நடித்துக் காட்டுவது நாடகமாகும். நாடகத்தில் இயற்றமிழும், இசைத்தமிழும் இணைந்திருக்கக் காண்கிறோம். எனவே நாடகம் என்பது முத்தமிழும் பொருந்திய ஒன்றாகும். இத்தகு பெருமை வாய்ந்த நாடகம் நம் நாட்டில் தோன்றி வளர்ந்ததையும், அஃது அவ்வப்போது பெற்ற மாற்றங்களையும் பற்றிப் பெரியவர் கு. சா. கி. அவர்கள் சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆற்றிய ஆய்வுரை இந்நூலாக உருப் பெற்றுள்ளது.

### பட்டறிவு பேசுகிறது

ஒன்றோடு நெருங்கிய தொடர்பு கொண்டவர் அதைப் பற்றிச் சொல்வது மிகவும் பொருத்தமானதும் சிறப்புடையதும் ஆகும். திரு. கு. சா. கி. அவர்கள் நாடக

உலகில் அரை நூற்றாண்டுக்கு மேலாகப் பல்வேறு நிலைகளில் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளவர். ஆதலால் பிறரிடம் அறிய முடியாத பல அரிய செய்திகளை இந்நூலுள் காண்கிறோம். பழம் பெரும் நடிகர் திரு. எம். கே. இராதாஅவர்கள் திரு. கு.சா. கி. அவர்கட்கு எழுதியுள்ள கடிதத்தில், "நமது இளமைப் பருவ நிகழ்ச்சிகளெல்லாம் என்நினைவில் நிழலாடியது; அன்று அப்பாவின் ஆணைப்படி—நாடகப் பாடங்களைச் சொல்லிக் கொடுக்கும் போதும், ஒத்திகை பார்க்கும் போதும் எத்தனையோ முறை உன்னைக் கண்டித்தும், தண்டித்தும், ஏன் அடித்தும் கூட இருக்கிறேன். ஆனால் இன்று உன்னைக் கவிஞனாக, நாடக ஆசிரியனாக, பல்கலைக் கழகப் பேச்சாளனாகக் காணும்போது என் உள்ளம் பெருமிதம் அடைகிறது" என்று குறிப்பிட்டுள்ளதிலிருந்து நாடகக் கலைக்கும் திரு. கு. சா. கி. க்கும் உள்ள நீண்டகாலத் தொடர்பு நன்கு புலனாகிறது. நாடக உலகின் பழந் தலைமுறையைச் சார்ந்தவர் என்பதாற்றான் இன்றைய இளைஞர்கள் அறிய முடியாத பல புதிய தகவல்களை இந்த உரைக்கோவையில் அவர் தந்திருக்கிறார். படிப்பறிவினால் அன்றிப் பட்டறிவினால் தரப்படுகின்ற செய்திகளாதலின் அவை உயிர்ப்புடன் விளங்குகின்றன. இதை அவரே, "நடிகனாகவும், நாடக ஆசிரியனாகவும், பாடலாசிரியனாகவும் பணியாற்றிய அனுபவத்தைக் கொண்டு சில புதிய தகவல்களைத் தரமுடியும் என்ற நம்பிக்கையுடன் உரையைத் தொடங்குகிறேன்" (பக். 21) எனக் குறிப்பிட்டுள்ளார்.

**நாடகம்**

"நாடகம் நாட்டிற்கு அணிகலன்; நாகரிகத்தின் அளவுகோல்; நாட்டின் படப்பிடிப்பு; பாமரர்களின் பல்கலைக் கழகம்..." எனப் பலவாறாக அவர் அடுக்கிச் சொல்வதிலிருந்து (பக். 22) அவருக்கு நாடகத்தின்பால் உள்ள ஈடுபாட்டை நாம் நன்குணர்கிறோம். நாடகம் என்ற

சொல்லை நாடு+அகம் எனப் பிரித்து நாட்டின் நிலையைத் தன் அகத்தே பிரதிபலித்துக் காட்டுவது. நாட்டின் இதய மாக (அகமாக) விளங்குவது; அகம் நாடுவது எனப் பல்வேறு பொருள் விளக்கம் தந்திருப்பது மிகவும் சிறப்பாக உள்ளது (பக். 26). நாடகத்தைக் குறிக்கப் பிற மொழிகளில் உள்ள சொற்களான Play, Drama என்பவற்றைவிட நாடகம் என்ற சொல் எத்தகைய பொருள் பொதிந்தது என்பதையும் வேறுபடுத்திக் காட்டுகிறார் (பக். 27).

## நாடகத்தில் அடங்குபவை:

நாட்டியம் நாடகத்தின் ஒரு பகுதியே; நாடகமும் நாட்டியமும் கூத்து என்ற பொதுப் பெயரால் அழைக்கப் படுகின்றன என்பதற்குச் சான்றுகள் தந்துள்ளார். (பக். 38. 39). மேலும், ''பாடியும் ஆடியும், நவரச பாவ பேதங்களுக்கு ஏற்பவும், கதையில் வரும் பாத்திரங்கட்கேற்பவும் பேசியும் நடித்தும் காட்டியும், கதையை நடத்திக்காட்டும் கதா காலட்சேப நிகழ்ச்சிகளையும் நாடகத்தின் ஒரு கூறாகவே கருதுகிறேன்'' என்கிறார் (பக். 52). அதுபோன்றே கிராமப் புறங்களில் விழாக்காலங்களில் பம்பை, உடுக்கை முழங்க, சிலம்பு ஒலிக்கப் பெண்கள் மிகுந்த ஆவேசங் கொண்டு கூச்சலிட்டு ஆடுவதும் ஒருவகை நாடக அங்கமே (பக். 54). கிராமக்கலைகளில் இன்றும் உயிர்ப்போடு விளங்கும் கும்மி, கோலாட்டம், கரகம், காவடியாட்டம், ஒயிலாட்டம், வில்லுப்பாட்டு, பொய்க்கால் குதிரையாட்டம் ஆகிய கலைகள் எல்லாம்கூட ஒருவகை நாடக அங்கம் என்று கொள்ள வேண்டும்:[பக், 54]. இவ்வாறு ஆசிரியர் 'நாடகம்' என்ற சொல்லுக்கும் பரந்த அளவில் பொருள் கொண்டு ஆய்வு செய்துள்ளார்.

## முக்காலம்

நாடகத்திற்குப் பொருளும், நாடகத்துள் அடங்குபவை எவையெவை என்றும் விளக்கியவர், அதனை முற்காலம்,

இடைக்காலம், இக்காலம் என மூன்று பிரிவுகளாகக் கொண்டு அவ்வக் காலத்தில் நாடகத்தின் அமைப்பு, அவற்றில் ஏற்பட்ட மாறுதல்கள் ஆகியவற்றைத் தக்க சான்றுகளுடன் விளக்கிச் செல்கிறார்.

முற்காலம :

நூலாசிரியர் அகத்தியம் முதல் சிலப்பதிகாரம் வரையுள்ள காலத்தை நாடகக் கலையின் முற்காலமாகக் கொள்கிறார்.

> "நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
> பாடல் சானற புலனெறி வழக்கம்"

எனத் தொல்காப்பியம் கூறுவதால் தொல்காப்பியர் காலத்திலேயே நாடகம் ஏற்றம் பெற்றிருந்தது என்பதை அறிகிறோம். ஒருவரிடம் செல்வம் வந்து சேர்வதானது கூத்தாடுமிடத்தில் கூட்டம் சேர்வதைப் போன்றது; அது நீங்கிப் போதலும் கூத்து முடிந்ததும் கூட்டம் கலைவதைப் போன்றதாகும் என்பதை,

> "கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
> போக்கும் அதுவிளிந் தற்று"

எனத் திருக்குறள் குறிப்பிடும். விழாவின் கண் ஆடும் கூத்தரது வேறுபட்ட கோலம் போல மக்கள் அடைவடைவே தோன்றி, இயங்கி, இறந்து போகும் இயல்புடையது இவ்வுலகம் என்ற கருத்தைச் சோழன் நலங்கிள்ளியின்,

> "............விழவில்
> கோடியா நீர்மை போல முறைமுறை
> ஆடுநர் சழியும்இவ் வுலகம்"

என்ற புறநானூற்றுப் பாடலடிகள் தெரிவிக்கும். இவற்றால் பண்டே நாடகங்களில் பலர் பல்வேறு கோலம் புனைந்து

நடித்ததையும், மக்கள் கூடி அந் நாடகங்களைக் கண்டு சென்றதையும் நாம் அறிய முடிகிறது. "சிலம்பில் காணப் படும் நாடக மேடை அமைப்புமுறை. 15ஆம் நூற்றாண்டு வரையிலும்கூட ஆங்கில நாட்டு மேதைகள் காணாத புதுமையாகும்" என்பதை ஆசிரியர் குறிப்பிட்டுக் காட்டு கிறார் (பக்.64). இவற்றால் பண்டைய நாட்களில் நாடகம் பெற்றிருந்த உயர்வு நன்கு புலனாகிறது.

## இடைக்காலம் :

அத்தகைய பண்டைய நாடக இலக்கியங்கள் எங்கே? என்ற வினாவை எழுப்பி, அவை அழிந்ததற்குக் காரணம் வேற்றினத்தினர், வேற்று மதத்தினர், வேற்று மொழியினர் ஆகியோரின் ஆட்சியும் கலாச்சாரப் படையெடுப்புமே ஆகும் என்ற காரணத்தையும் ஆசிரியர் கூறுகிறார் (பக்.56). "கி. பி. 3 ஆம் நூற்றாண்டு தொடங்கி ஆறாம் நூற்றாண்டு முடியத் தமிழகத்தின் இருண்ட காலமென வரலாற்றறிஞர் களால் குறிக்கப் பெறும் களப்பிரர்களின் கொடுங் கோன்மை நடந்த காலங்களில் தமிழர்களின் கலை, கலாச் சாரம் அனைத்துமே சீரழிக்கப்பட்டன" (பக். 59). சமண, பௌத்த மத வளர்ச்சியும் நாடகக்கலை அழிவுக்குக் காரண மானது. இதனைப் பரிதிமாற் கலைஞரும் தம் தமிழ் மொழி வரலாற்றில், "சிறப்புடைய நாடகக் கலை வளர்ந்து வந்த போது நம் நாட்டில் செல்வாக்குப் பெற்ற புத்தமும் சமணமும் நாடகம் காமத்தை மிகுதிப் படுத்துவதென்று தவறாக எண்ணினர். அதனால் அவர்கள் செல்வாக்கு மிகுந் திருந்த காலத்தில் நாடகத் தமிழை வளரவொட்டாது தடுத் தனர்" என்று குறிப்பிடக் காணலாம். நூலாசிரியர் சிலப் பதிகார காலத்திற்குப் பின்னே 19ஆம் நூற்றாண்டின் இறுதி வரையுள்ள காலத்தை இடைக்காலமாகக் கொண்டு இச் செய்திகளை ஆய்கிறார். ஆய்வின் பயனாக, "நாடகத்தைப் பொறுத்தவரை சிலப்பதிகாரத்திற்குப் பின் 17ஆம் நூற் றாண்டின் இறுதிவரை இருண்ட காலமென்றே சொல்ல

வேண்டும்' என்கிறார் (பக்.66). 17ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு நொண்டி நாடகங்கள், குறவஞ்சி நாடகங்கள், பள்ளு நாடகங்கள், மந்தை நாடகங்கள் போன்ற நாடகங்கள் நடத்தப்பட்டு வந்தன என்பதையும் தெளிவுபடுத்துகிறார் (பக்.67).

**இக்காலம் :**

19ஆம் நூற்றாண்டின் இடையிலும் இறுதியிலும் நாடகக் கலை மறுமலர்ச்சி பெற்றது. ஆங்கில ஆட்சி, ஆங்கிலக் கல்வி நம் நாட்டில் வேரூன்றியதன் காரணமாக இந்திய நாடக உலகிலும், தமிழ் நாடக உலகிலும் மாறுதல் உண்டாகியது. மேலை நாட்டுப் புதினங்களைத் தழுவி நாடக உத்திகளைக் கையாளும் முறை தோன்றியது. பம்மல் சம்பந்த முதலியார், சங்கரதாஸ் சுவாமிகள், சதார்வதானம் கிருஷ்ணசாமிப் பாவலர் போன்ற பெரும் புலவர்கள் நாடகங்களை எழுதியும் நடத்தியும் வந்த அருந்தொண்டினால் நாடகக்கலை புத்துயிர் பெற்றதை ஆசிரியர் வரலாற்றடிப்படையில் விரிவாக விளக்கிச் சொல்கிறார். "இருபதாம் நூற்றாண்டு தொடங்கி அரை நூற்றாண்டுகள் வரை தமிழ் நாடகக்கலையின் பொற்காலம் என்றே கூற வேண்டும்" என்பது ஆசிரியர் துணிபு (பக். 146.). ஒழுங்கும் கட்டுப்பாடும் நிறைந்த நாடகக் குழுவினர் மக்களிடையே பெற்ற செல்வாக்கினால் நாடகக்காரனுக்குக் கூத்தாடி, ஒழுக்கமற்றவன் என்றிருந்த அவப் பெயர் சிறிது சிறிதாக மறைந்து நடிகர்களைக் கலைஞர்கள் என்று போற்றும் நிலைமையும் வளர்ந்தது. பல்வேறு நாடகக்குழுக்கள் தோன்றின என்றாலும் அவற்றுள் காலப் போக்கில் கன்னையா கம்பெனி, நவாப் ராஜமாணிக்கம் கம்பெனி, டி. கே. எஸ். சகோதரர் கம்பெனி போன்ற ஒரு சிலவே நிலைத்து நின்றன. இருபதாம் நூற்றாண்டின், அரை நூற்றாண்டின், பின் அரைப்பகுதியை டி. கே. எஸ். சகோதரர்கள் சகாப்தம் என்றே கூறலாம் என்பதையும்

ஆசிரியர் விளக்குகிறார். தமிழில் குழந்தை நாடகங்களும் தோன்றித் திறம்பட நடித்துக் காட்டப்பட்டன. நாடகத்திலிருந்து திரைப்படம் வளர்ச்சியுற்றது. திரையுலகிற்கு நாடகமேடை அளித்த நடிகர்கள் மிகப் பலராவார்.

## இன்றைய நிலை:

இவ்வாறு வளர்ந்து வந்த நாடகம் பல்வேறு காரணங்களால் இன்று சூன்ய நிலையில் உள்ளது என ஆசிரியர் வருந்துகிறார். இந் நூற்றாண்டின் முன் அரைப்பகுதியில் போட்டிபோட்டு வளர்ந்த நாடக வளர்ச்சி இன்று பொய்யாய், கனவாய், பழங்கதையாய்ப் போனதை எண்ணி வெதும்புகிறார். "தமிழுக்கென்றே தனியான இலக்கணம் வகுத்து அகத்தியம், பரதம், தொல்காப்பியம் என்று வழி வழியாக எண்ணற்ற நாடக இலக்கண நூல்களைப் படைத்துப் பெருமை பேசிக் கொண்டிருக்கும் தமிழ்க்குலம், இந்த அவல நிலைக்கு வரலாமா? நாளைய வரலாறு நம்மைக் கண்டு நகைக்காதா? என்பதுதான் என் கவலை" எனக் குமுறுகிறார் (பக்.212). இவர் காலத்திலேயே நாடகத்திற்குப் பண்டைய ஏற்றம் நேரிட்டு இவர் உளம் மகிழும் நிலை உருவாக வேண்டும் என நாம் உளமார விழைவோமாக.

## நாடகங்களின் பயன் :

நாடக வரலாற்றை விளக்கிய ஆசிரியர் நாடகங்களின் பயனைச் சுட்டிக் காட்டுகிறார். நாடக நிகழ்ச்சிகள் அவை தோன்றும் காலத்தில் நாடு இருக்கும் நிலையைப் படம் பிடித்துக் காட்டுவன என்பதைச் சுதந்திரப் போராட்டக் காலத்தில்—இருபதாம் நூற்றாண்டின் தொடக்க காலத்தில் நடைபெற்ற நாடக மேடைக் காட்சிகளைக் கொண்டு ஆசிரியர் விரிவாக விளக்குகிறார். அக்காலத்தில் வள்ளித் திருமணம் நாடகம் நடைபெறும்; தினைப் புனத்தில் வள்ளி ஆலோலம் பாடிக் குருவிகளை விரட்டுவாள்; அவளைக்

